# திருப்புகழமிர்தம்




ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை

சாதாரண — யுதவு பரிமள மதுகர வெகுவித — கார்த்திகை

வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

நமது டெலிபோன் எண் 20278

உ

# எமது வெளியீடுகளில் சில

## திருப்புகழ் விரிவுரைகள்

**1. இரண்டாம் தொகுதி**

இரண்டாவது படைவீடாகிய திருச்செந்தூருக்குரிய திருப்புகழ்ப் பாடல்கள் 83க்கும் விரிவான உரை அடங்கியது. மூன்றாவது பதிப்பு டெமி 1/8 அளவில் 440 பக்கங்கள். விலை ரூ 5 00
தபாற் செலவு ரூ 1 55

**2. ஆறும் தொகுதி**

ஐந்தாவது படைவீடாகிய குன்று தோறாடலைச் சேர்ந்த விநாயகமலை, விராலிமலை கொடுங்குன்றம் (பிரான்மலை) குன்றக்குடி, திருச்செங்கோடு, கொல்லிமலை, இராஜகெம்பீரநாட்டு வளமலை, ஞானமலை, சென்னிமலை, ஊதிமலை, குருடிமலை, தென்சேரிகிரி, கொங்கணகிரி, தீர்த்தமலை, கனகமலை, புகழிமலை, பூம்பறை, கழுகுமலை, பொதியமலை, வள்ளியூர், கதிர்காமம், அருக்கொணமலை, திருக்கோணமலை, பல குன்றுகள் ஆக 24 தலங்களின் 89 பாடல்கள், ஆறாவது படைவீடாகிய பழமுதிர்சோலைக்குரிய திருப்புகழ்ப் பாடல்கள் 18 ஆக மொத்தம் 107 பாடல்களுக்கு விரிவான உரை அடங்கியது.

டெமி 1/8 அளவுல் 456 பக்கங்கள் விலை ரூ 5 00
தபாற் செலவு ரூ 1 50

**திருவகுப்பும் கந்தரந்தாதியும்**

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் அருளிய திருவகுப்புப் பாடல்கள் 25 மூலமும், கந்தரந்தாதிப் பாடல்கள் முழுவதுக்கும் உரையும் கொண்ட நூல். கிரௌன் 1/8 அளவில் 140 பக்கங்கள். விலை ரூ 1 50
தபாற் செலவு (பதிவு அஞ்சலில்) ரூ 1 10

எமது வெளியீடுகள் விரைவாகச் செலவாகி வருகின்றன. கையிலுள்ள பிரதிகள் செலவாகிவிட்டால் மறுபதிப்பு அச்சிடும் நோக்கம் கிடையாது. கடித விலையும் அச்சுக் கூலியும் வேறு காரணம். ஆக அன்பர்கள் தங்களுக்கு வேண்டிய புத்தகங்களை விரைவில் பெறுவதே நல்லது.

புத்தகங்களைத் தபால் மூலம் பெறும் போது இரண்டு புத்தகங்களுக்குக் குறையாது பெற்றால் தபாற் செலவு (பதிவு தபாற் செலவு 0·95) குறையும். 0·50 விலைக்கு மேற்பட்ட புத்தகங்களை பதிவு செய்யாத அஞ்சலில் அனுப்பி வைப்பதில்லை.

மானேஜர், திருப்புகழமிர்தம்

## அச்சில் உள்ளவை

**1. திருப்புகழ் விரிவுரை—ஏழாம் தொகுதி**

பஞ்சபூத ஸ்தலங்களில் முதல் இரண்டு தலங்களாகிய காஞ்சீபுரம் திருவானைக்கா ஆகிய இரண்டு தலங்களுக்குமுரிய திருப்புகழ்ப் பாடல்கள் 58க்கு விரிவான உரை கொண்டது. 1970 நவம்பர் இறுதியில் வெளிவரும்.

**2. கந்தரலங்காரம் (உரையுடன்)**

நான்காவது பதிப்பு 1970 டிசம்பர் இறுதியில்வெளி வரலாம்.

உ

ஓம் குஹாய நம !



# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"





| மலர் 35 | சாதாரணஞூ—கார்த்திகை மீ<br>நவம்பர் 1970 | இதழ் 8 |
|---|---|---|



## திருப்புகழ்

### திருவருணை

செஞ்சொற் பண்பெற் றிடுகுட மாமுலை
கும்பத் தந்திக் குவடென வாலிய
தெந்தப் பந்தித் தரளம தாமென விடராவி

சிந்திக் கந்தித் திடுகணை யாமுன
தங்கத் தம்பொற் பெதுவென வோதுவ
திண்டுப் புந்தித் திடுகனி தானுமு னிதழாமோ

மஞ்சொக் குங்கொத் தளகமெ னுமிடை
கஞ்சத் தின்புற் றிடுதிரு வேயிள
வஞ்சிக் கொம்பொப் பெனுமயி லேயென
முறையேய

வந்தித் திந்தப் படிமட வாரொடு
கொஞ்சிக் கெஞ்சித் தினமவர் தாடொழு
மந்தப் புந்திக் கசடனெ நாளுன தடிசேர்வேன்.

நஞ்சைக் கண்டத் திடுபவ ராரொடு
திங்கட் பிஞ்சக் கரவணி வேணியர்
நம்பர்ச் செம்பொற் பெயரசு ரேசனை யுகிராலே

நந்தக் கொந்திச் சொரிகுடல் சோர்வர
நந்திக் கம்பத் தெழுநர கேசரி
நஞ்சக் குண்டைக் கொருவழி யேதென மிகநாடி

வெஞ்சச் சிம்புட் சொருபம தானவர்
பங்கிற் பெண்கற் புடையபெ ணாயகி
விந்தைச் செங்கைப் பொலிசுதவேடுவர் புனமீதே

வெண்டித் தங்கித் திரிகிழ வாவதி
துங்கத் துங்கக் கிரியரு ணாபுரி
வெங்கட் சிங்கத் தடிமயி லேறிய பெருமாளே.

## பதவுரை

நஞ்சை கண்டத்து இடுபவர்=விஷத்தைக் கழுத்தில் தரிப்ப வரும், ஆரொடு=ஆத்தி மாலையுடன், திங்கள் பிஞ்சு=இளம் பிறை யையும், அக்கு=எலும்பையும், அரவு அணி வேணியர் பாம்பையும் தரித்துள்ள சடைமுடியுடையவரும், நம்பர்=விரும்பப்படுகின்ற வரும், செம்பொன் பெயர் அசுர ஈசனை=இரணியன் என்ற பேருள்ள அசுர வேந்தனை, உகிராலே நகத்தாலே, நந்த கொந்தி=அழியும்படி குத்திக் கிழித்து, சொரி குடல் சோர்வர சொரிந்து விழும் குடல் தளர்ச்சியுற, கம்பத்து நந்தி எழும்=தூணிலே தோன்றி யெழுந்த, நரகேசரி=நரசிங்க மூர்த்தி நஞ்ச குண்டைக்கு=நைந்து அடங்கிக் குறுகுவதற்கு, ஒரு வழி ஏது என மிக நாடி=வழி யாது என்று மிகவும் ஆராய்ந்து, வெஞ்ச கடுமை கொண்டவராய், சிம்புள் சொருபம் அது ஆனவர் சரபப் பறவையின் வடிவு கொண்டவரும் ஆகிய சிவபெருமானுடைய, பங்கில் பெண்=பக்கத்தில் இருக்கும் பெண்மணியும், கற்பு உடைய பெண் நாயகி=கற்பு நிறைந்த பெண்கள் நாயகியுமாகிய பார்வதி தேவியின், விந்தை செம் கையில் பொலிசுத=அழகிய சிவந்த கரமலரில் விளங்குங் குழந் தையே! வேடுவர் புனம் மீது=வேடுவர்களின் தினைப்புனத்தில், வெண்டி தங்கி=களைப்புற்றுத் தங்கி, திரி கிழவா= திரிந்த கிழ வரே! அதி துங்க துங்க கிரி=மிகவும் உயர்ந்ததும் தூய்மையானது மான மலையுள்ள, அருணா புரி=அருணை மாநகரில், வெம் கண் சிங்கத்து அடி=விரும்பத்தக்க கண்ணையுடைய சிங்காசனம் போன்ற, மயில் ஏறிய=மயில் மீது ஏறிய, பெருமாளே பெருமையிற் சிறந் தவரே! செம் சொல் பண் பெற்றிடும் செம்மையான சொற்களால் புகழத்தக்க, குட மா முலை=குடம் போன்ற பருத்த கொங்கை யானது, கும்பம் தந்தி குவடு என=கும்பம் யானை மலை என விளங்கி யும், வாலிய=வெண்மை நிறங்கொண்ட, தெந்த பந்தி=பல்

வரிசை, தரளம் அது ஆம் என=முத்துபோல் விளங்கியும், இடர் ஆவி சிந்தி=துன்பத்தில் என் உயிரைத் தள்ளி, கந்தித்திடும்= வாசனை வீசி, களை ஆம் =அழகு வாய்ந்தனவாம், (ஆதலால்) உனது அங்கத்து அம் பொற்பு எது என ஒதுவது=உனது அங்கங்களின் அழகிய பொலிவுக்கு எதை யான் உவமையாகக் கூறுவது? திண் துப்பும்=வலிமையுள்ள பவளமும், தித்திடு கனி தானும் =இனிய கனியும். உன் இதழ் ஆமோ =உன் வாயிதழுக்கு நிறத்திலும் சுவை யிலும் நிகராகுமோ? மஞ்சு ஒக்கும் கொத்து அளகம் என = மேகத்தை நிகர்க்கும் திரண்ட கூந்தல் என்றெல்லாம் கூறி, மிடை= நெருங்கிய. கஞ்சத்து இன்பு உற்றிடு திருவே=தாமரையில் மகிழ்ந்து வீற்றிருக்கும் லட்சுமியே! இள வஞ்சி கொம்பு ஒப்பு எனும் மயிலே என =இளமையுடைய கொடிக்கும் கொம்புக்கும் ஒப்பான மயில் போன்றவளே! என்றெல்லாம், முறை ஏய வந்தித்து =முறை மையாக வந்தனை வார்த்தைகளைப் பேசி, இந்தப்படி=இவ்வண்ண மாக, மடவாரொடு=மாதர்களுடன், கொஞ்சி = கொஞ்சிப் பேசியும், கெஞ்சி=கெஞ்சிப் பேசியும். தினம்=நாள்தோறும், அவர் தாள் தொழும்=அவர்களுடைய பாதத்தைத் தொழுகின்ற, மந்த புந்தி = மங்கிய அறிவுடைய, கசடன் =குற்றமுடையவனுகிய அடியேன், எ நாள் உனது அடி சேர்வேன் =எந்த நாள் உனது திருவடியைச் சேருவேன்?

## பொழிப்புரை

நஞ்சினைக் கழுத்தில் தரிப்பவரும், ஆத்திமலர் மாலையை யும், பிறைச் சந்திரனையும், எலும்பையும், பாம்பையும் அணிந்த சடைமுடியுடையவரும் ஆகிய சிவபெருமான் இரணியன் என்ற அசுர வேந்தனை, நகத்தாலே அழியும்படிக் குத்திக் கிழித்து, சொரிந்து குடல் விழுமாறு, தூணில் தோன்றிய நரசிங்க மூர்த்தியின் அகங்காரம் குறைந்து அடங்க வழியாது என்று சிந்தித்து, கடுமையான சரபப்பட்சி வடிவங்கொண்ட அச்சிவமூர்த்தியின் இடப்பாகங்கொண்ட, கற்புடைய பெண் கள் நாயகமாகிய பார்வதிதேவியின் அழகிய செங்கரத்தில் விளங்கும் பாலகரே! வேடுவர்களின் தினைப்புனத்திலே, களைப் புற்றுத் தங்கித்திரிந்த கிழமுனிவரே! மிகுந்த உயரமும் தூய் மையும் உடைய மலையின் அருகில் விளங்குந் திருவருணைபுரி யில் வீற்றிருக்கும் பெருமிதமுடையவரே! விரும்பத்தக்க கண் களையுடைய சிங்காதனம் போன்ற மயிலில் ஏறிய பெருமித முடையவரே! செஞ்சொற்களால் புகழத்தக்க குடம்போன்ற பருத்த கொங்கையானது கும்பகலசம், யானை, மலை என விளங் கியும், வெண்மையான பல் வரிசை முத்துப்போல் விளங்கியும், என் உயிரைத் துன்பத்தில் தள்ளி மணம் வீசவல்ல அழகு வாய்ந்தனவாம்; ஆதலால், உனது அங்கங்களின் அழகிய

பொலிவுக்கு எதை யான் உவமையாகக் கூறுவது? வலிமை யுள்ள பவளமும் இனிக்கின்ற கனியும் உன் வாயிதழுக்கு நிறத்திலும் சுவையிலும் நிகராகுமோ? மேகத்தை நிகர்க்கும் திரண்ட குழல் என்றும், நெருங்கிய தாமரையில் மகிழ்ந்து உறையும் இலக்குமியே! இளங்கொடிக்கும் கொம்புக்கும் நிக ரான மயில் போன்றவளே! என்றெல்லாம் முறையாக வந்தனை வார்த்தைகளைக் கூறி, கொஞ்சியும் கெஞ்சியும் நாள்தோறும் அம்மாதர்களின் பாதங்களைத் தொழுகின்ற, மழுங்கிய அறி வுடைய கீழ் மகனாகிய அடியேன் எந்த நாள் உமது திருவடி யைச் சேருவேன்?

## விரிவுரை

இந்தத் திருப்புகழில் முதல் நான்கு அடிகள் மகளிருடைய அங்கங்களைப் புகழும் செஞ்சொற்கள் அமைந்தவை.

**திண்டுப்புந்தித் திடுகனிதானுமு னிதழாமோ :—**

திண் துப்பும் தித்திடு கனிதானும் என்று பதச் சேதம் புரிக.

பெண்களின் இதழ் பவளம் போன்றது; திண் துப்பு—நன் ருக விளைந்த பவளம் போன்றது. கனிபோல் தித்திக்கும் இயல்புடையது.

திருமாலுடைய இதழைப்பார்த்து ஆண்டாள் "திருப்பவள வாய்தான் தித்தித்திருக்குமோ?" என்கின்ருர்.

**கசடனெ நாளுன தடிசேர்வேன் :—**

கசடன் எந்நாள் உனது அடிசேர்வேன் என்று பதப்பிரிவு புரிக.

கசடன்—அறிவில்லாதவன். பெண்களின் அழிகின்ற அழகைச் சிறந்ததென்று நினைந்து உருகி அன்புடன் சிறப் பித்துப் புகழ்ந்து கெடுகின்ற நாயேன் "முருகா! உன்பதமலரை என்று சேர்வேன்?" என்று அடிகளார் ஏங்கியுரைக்கின்ருர்.

**நஞ்சைக் கண்டத் திடுபவர் :—**

தேவர்கள் சாவா மூவா நலம்பெற அமுதங்கடைய முயன் ருர்கள். இந்தச் சாவா மூவா நலத்தைச் சிவமூர்த்தியை வேண் டினல் ஒரு கணத்தில் பெறலாம்.

எளிதான இந்த நெறியை உணராத இந்திராதி இமைய வர்கள், சந்திரனைத் தூணுகவும், திருமால் தாங்கும் ஆமை யாகவும், வாசுகி தாம்பாகவும் கொண்டு பலகாலம் பாற்கடலைக் கடைந்தார்கள். விநாயக வழிபாடு செய்யாமையால், ஆலகால

விஷம் தோன்றியது; அந்த அதிபயங்கரமான விஷம் உலகங்களையெல்லாம் வெதும்ப வைத்து வேதனையைத் தந்தது.

மாலயனாதி வானவர்கள் நடுங்கித் திருக்கயிலாயமலை சென்று சிவபெருமானை அடைக்கலம் புகுந்தார்கள். கருணையங்கடலாகிய சிவபெருமான் அவர்களுக்கு அபயந்தந்து, ஆலால விஷத்தை யுண்டு கண்டத்தில் தரித்தருளினார். அதனால் ''திருநீலகண்டர்'' என்று பேர் பெற்றார்.

**மாலெங்கே ? வேதனுயர் வாழ்வெங்கே ? இந்திரன் செங்**
**கோலெங்கே ? வானோர் குடியெங்கே ?—கோலஞ் செய்**
**அண்டமெங்கே ? அவ்வவ்வரும் பொருளெங்கே நினது**
**கண்டமங்கே நீலமுறுக் கால்.** —திருவருட்பா.

தன்னை மதியாது தேவர்கள் பாற்கடலைக் கடைந்து, அதனால் துன்புற்று ஆலகால விடத்தைக்கண்டு அஞ்சி அடைக்கலம் புகுந்தபோது, அவர்கட்கு சிவபெருமான் அபயந்தந்து ஆட்கொண்டருளினார். அது அவருடைய அளவிடற்கரிய திருவருளைக் குறிக்கின்றது.

**ஆரொடு :—**

ஆர்—ஆத்தி. ஆத்திமலர் சிவபெருமானுக்கு உகந்த மலர். அதனால் ஆத்திசூடி என்று அவருக்கு ஒரு பேருண்டு.

**''ஆத்திசூடி யமர்ந்த தேவனை ஏத்தி யேத்தித்**
**தொழுவோமி யாமே''** —ஔவையார்.

**திங்கட்பிஞ்சு :—**

தட்சனுடைய சாபத்தால் தேய்ந்து ஒய்ந்த சந்திரன் எங்கு சென்றும் புகலிடம் பெறாது திருக்கயிலை வந்து சிவபிரானிடம் சரணாகதியடைந்தான். அந்த பிறைக் கொழுந்தைத் தமது சென்னியில் சூடி சிவபெருமான் சந்திரனை ஆட்கொண்டருளினார். இது சிவமூர்த்தியின் எல்லையில்லாத கருணையைத் தெரிவிக்கின்றது.

**அக்கரவணி வேணியர் .—**

அக்கு—எலும்பு. அல்லது உருத்திராட்சம் என்றும் பொருள்படும்.

உருத்திராட்சமாலையணிந்தவர் சிவபெருமான்.

தாருகவனத்து முனிவர்கள் அபிசார வேள்வி செய்து சிவபெருமானைக் கொல்லுமாறு கொடிய பாம்புகளை யேவினார்கள். அரனார் அவைகளை அணிகலமாக அணிந்துகொண்டருளினார்.

"வீம்புடைய வன்முனிவர் வேள்வி செய்து விட்டகொடும்
பாம்பணைத்துந் தோள் மேல் பரித்தனையே" —திருவருட்பா.

"செம்பொற் பெயரசுரேசனை நந்திக் கம்பத் தெழுநரகேசரி :—

செம்பொற்பெயரசுரேசன்—இரணியன். "கடவுள் இல்லை" என்று ஐந்துகோடியே எழுபதினுயிரத்து அறுபத்தொரு வருடங்கள் பிரசாரம் புரிந்தான். உலகங்களை யெல்லாம் நடுங்கி ஒடுங்கவைத்தான். திருமால் தூணிலேயிருந்து நரசிங்கமாக வந்தார்.

சிங்கம் ஆற்றல் படைத்தது; மனிதன் அறிவு படைத்தவன். ஆற்றலும் அறிவும் ஒன்றுபட்டுக் கூட்டணியாக நரசிங்கமாக வந்து இரணியனைக் கொன்று அவனுடைய உதிரத்தைக் குடித்தார்.

நந்தி—தோன்றி.

நரகேசரி—நரசிங்கம்.

இரணியன் உதிரத்தைப் பருகியதால் நரசிங்கம் உலகங்களை நடுங்கவைத்தார்.

நஞ்சக் குண்டைக் கொரு வழியேதென மிகநாடி:—

நஞ்சி—நைந்து போக.

குண்டை—குறுமை.

"குண்டைக் கோட்ட குறுமுள் கள்ளி" —அகநானூறு 184.

நரசிங்கத்தின் வலிமை நைந்து குறுக என்ன வழியென்று சிவபெருமான் ஆராய்ந்தார்.

நரசிம்மத்தின் வெறிச் செயலைக்கண்டு தேவர்கள் வாடி ஓடி சிவபெருமானை நாடி முறையிட்டார்கள். சிவபெருமான் வீரபத்திரரைப் பார்த்து, "நரசிங்கத்தை அடக்குதி" என்று பணித்தருளினுர். வீரபத்திரர் சரபப்பட்சி யுருவுடன் சென்று நரசிங்கத்தைக் கொத்திக் கீறி அடக்கினுர். அதன் தோலையும் முகத்தையும் கொணர்ந்து பிதாவிடம் தந்தார்.

சிவபெருமான் சிங்கத் தோலையுடுத்து நரசிங்காம்பரன் என்று பேர் பெற்றுர். இதன் விரிவை ஞானவரோதயர் பாடிய உபதேச காண்டத்தில் காண்க.

அஞ்சலீ ரென் றளித்தனன் சிம்புளாய்
வஞ்ச மானிட வாளரி யாயுளைத்
துஞ்சு வித்துரி கொண்டொளி தோற்றினுன்
தஞ்ச முண்டவர் தஞ்சர ணயினுன்.

—காஞ்சிப்புராணம், நரசிங்க படலம் 12.

**வெஞ்சச் சிம்புட் சொருபமதானவர் :—**

வீரபத்திரர் சரபப் பட்சியாகச் சென்று நரசிங்கத்தை யடக்கியதைச் சிவபெருமான் மீது ஏற்றி இங்கே அருணகிரியார் கூறுகின்றார்.

வெஞ்ச—வெச்சு என்ற சொல் சந்தத்தை நோக்கி வெஞ்ச என வந்தது.

வெச்செனல்—கடுமையைக் குறிக்கும் சொல்.

**"தமதீஞ்சொல் வெச்சென்றிடச் சொல்லி"** —சிந்தாமணி (2015).

**புனமீதே வெண்டித் தங்கித் திரிகிழா :—**

வள்ளியம்மைக்கு அருள்புரிய வேண்டி முருகப் பெருமான் கிழவடிவங் கொண்டு திரிந்தருளினார்.

வெண்டி—களைப்புற்று.

கிழவடிவாகித் திரிந்து களைப்புற்றார். இது முருகனுடைய கருணைத் திறத்தைக் குறிக்கின்றது.

**அதிதுங்கத்துங்கக்கிரி அருணபுரி :—**

துங்கம்—உயர்வு; துங்கம்—பரிசுத்தம். மிகவும் உயர்ந்ததும், தூய்மையானதுமான திருவண்ணாமலையில் அடிவாரத்தில் உள்ள நகரம் அருணபுரி.

**வெங்கட் சிங்கத்தடி மயிலேறிய :—**

சிங்காதனம் போன்ற மயிலில் முருகன் ஏறி யுலாவுகின்றான்.

கருத்துரை

அருணைமேவும் அரசே! மாதர் மயல் சேராது, உன் அடி சேர அருள் செய்.

## திருப்புகழ்

செயசெய அருணத் திரிசிவ யநமச்
செயசெய அருணத் திரிமசி வயநச்
செயசெய அருணத் திரிநம சிவயத் திருமூலா

செயசெய அருணத் திரியந மசிவச்
செயசெய அருணத் திரிவய நமசிச்
செய செய அருணத் திரிசிவ யநமஸ்த் தெனமாறி

செயசெய அருணத் திரிதனில் விழிவைத்
தரகர சரணத் திரியென உருகிச்
செய செய குருபாக் கியமென மருவிச் சுடர்தாளைச்

சிவசிவ சரணத் திரிசெய செயெனச்
சரண்மிசை தொழுதேத் தியசுவை பெருகத்
திருவடி சிவவாக் கியகட லமுதைக் குடியேனே

செய செய சரணத் திரியென முனிவர்க்
கணமிது வினைகாத் திடுமென மருவச்
செடமுடி மலைபோற் றவுணர்க ளவியச் சுடும்வேலா

திருமுடி யடிபார்த் திடுமென இருவர்க்
கடிதலை தெரியாப் படிநிண அருணச்
சிவசுடர் சிகிநாட் டவனிரு செவியிற் புகல்வோனே

செயசெய சரணத் திரியெனு மடியெற்
கிருவினை பொடியாக் கியசுடர் வெளியிற்
றிருநட மிதுபார்த் திடுமென மகிழ்பொற் குருநாதா

திகழ்கிளி மொழிபாற் சுவையித ழமுதக்
குறமகள் முலைமேற் புதுமண மருவிச்
சிவகிரி யருணத் திரிதல மகிழ்பொற் பெருமாளே.

## பதவுரை

செய செய சரண அத்திரி என இது=ஜெய ஜெய திருவடி மலையே என்று கூறும் இத்துதிச் சொல், வினை காத்திடும் என=வினையினின்றும் நம்மைக் காத்திடும் என்று, முனிவர் கணம் மருவ=முனிவர் கூட்டங்கள் சரணமடைந்து பொருந்த, செடம் முடி மலை போற்றும்=தங்களுடைய உடலையும் முடியையும் கிரவுஞ்சம் என்ற மலையும் எழு கிரியும் காப்பாற்ற நின்ற, அவுணர்கள் அவிய சுடும் வேலா=அசுரர்கள் மடிந்து விழச் சுட்டெரித்த வேலாயுதரே! திரு முடி அடி பார்த்திடும் என=திருமுடியையும் திருவடியையும் கண்டு பிடியுங்கள் என்று கூறி, இருவர்க்கு=திருமால் பிரமன் என்ற இருவர்க்கும், அடி தலை தெரியாப்படி நிண=அடியும் முடியும் தெரியாத வண்ணம் நின்ற, அருண=சிவந்த நிறமுடைய, சிவ சுடர்=சிவ ஜோதியாகிய, சிகி நாட்டவன்=நெருப்புக் கண்ணுடைய சிவபெருமானது, இரு செவியில் புகல்வோனே=இரண்டு செவிகளிலும் உபதேசம் செய்தவரே! செய செய சரண அத்திரி எனும் அடியேற்கு=

ஜெய ஜெய திருவடி மலேயே எனத் துதி செய்கின்ற அடியேனுக்கு, இரு வினே பொடி ஆக்கிய சுடர் வெளியில்=இரு வினைகளையும் பொடி படுத்தும் ஒளி வெளியில், திரு நடம் இது பார்த்திடும் என மகிழ்=நமது திரு நடனம் இதோ பார்ப்பாயாக என்று கூறி மகிழும், பொன் குருநாதா=அழகிய குருநாதரே! திகழ் கிளி மொழி=விளங்கும் கிளி மொழி போலவும், பால் சுவை=பாலின் சுவை போலவும் அமைந்து, வாய் இதழ் அமுத=வாயிதழ் அமுதம் போல் அமைந்த, குற மகள்=வள்ளி பிராட்டியின், முலே மேல் புது மணம் மருவி=தனத்தின் மீதுள்ள புது மணத்தை யநுபவித்து, சிவ கிரி அருண அத்திரி தலம் மகிழ்=சிவ மலேயாம் அருணசலத் தலத்தில் மகிழ்கின்ற, பொன் பெருமாளே=அழகிய பெருமையிற் சிறந் தவரே! செய செய அருணத்திரி சிவய நம=ஜெய ஜெய அருணசலா "சிவயநம", செய செய அருணத்திரி மசிவயந=ஜெய ஜெய அருண சலா "மசிவயந", செய செய அருணத்திரி நமசிவய=ஜெய ஜெய அருணசலா "நமசிவய", திருமூலா=அழகிய மூலப் பொருளே! செய செய அருணத்திரி யநமசிவ=ஜெய ஜெய அருணசலா "யநமசிவ", செய செய அருணத்திரி வயநமசி=ஜெய ஜெய அருணசலா "வயநமசி", செய செய அருணத்திரி சிவயநமஸ்து என மாறி= ஜெய ஜெய அருணசலா "சிவயநமஸ்து" என்று மாறி மாறிச் செபித்து, செய செய அருணத்திரி தனில் விழி வைத்து=ஜெய ஜெய என்று கூறி அருணசலத்தில் மனக்கண்ணே வைத்து, அரகர சரணத் திரி என உருகி="ஹரஹர திருவடி மலேயே" என்று தியானித்து உள்ளம் உருகி, செய செய குருபாக்கியம் என மருவி=ஜெய ஜெய இந்த மந்திரம் எங்கள் குரு தந்த பாக்கியம் என்று கருதி உள்ளம் இதில் பொருந்தி, சுடர் தாளே=ஒளி வீசுந் திருவடியை, சிவ சிவ சரணத்திரி செய செய என=சிவ சிவ திருவடி மலேயே ஜெய ஜெய எனப் புகழ்ந்து, சரண் மிசை தொழுது ஏத்திய சுவை பெருக=திரு வடியின்மீது தொழுது போற்றிய இன்பம் பெருக, திருவடி சிவ வாக்கிய கடல் அமுதை குடியேனே =அந்தத் திருவடியின் சிவ மந் திரத்தால் பெறுகின்ற கடலமுதம் போன்ற இனிய அமுதை அடி யேன் பருகி மகிழேனே?

## பொழிப்புரை

ஜெய ஜெய திருவடிமலேயே! (சிவமலேயே) என்று கூறும் இத்துதி மந்திரம் எம்மை வினேயினின்றும் காக்கும் என்று முனிவர் கூட்டம் கூடிப் பொருந்த, தங்கள் உடலேயும் முடி யையும் கிரவுஞ்சமலே ஏழுகிரிகள் காத்து நின்ற அசுரர்கள் மடிந்து அழியும்படி சுட்டெரித்த வேலாயுதரே! திருமுடியையும் திருவடியையும் கண்டுபிடியுங்கள் எனக்கூறித் திருமால் பிர மன் என்ற இருவர்க்கும் அடியும் முடியும் காணுத வண்ணம்

நின்ற செந்நிறச் சிவஜோதியாய், அக்கினிக் கண்ணுடைய சிவபெருமானுடைய இரு செவிகளிலும் உபதேசஞ் செய்தவரே! ஜெய ஜெய திருவடி மலையே! (சிவமலையே) எனத்துதிக்கின்ற அடியேனுக்கு "உன் இருவினைகளையும் பொடியாக்கிய ஒளி வெளியில் யாம் புரியும் திருநடனம் இதோ பார்ப்பாயாக" என்று கூறியருளி மகிழும் அழகிய குருநாதரே! விளங்கும் கிளிமொழி போலவும், பாலின் சுவைபோலவும் அமைந்து, வாயிதழ் அமுதம்போலத் திகழும் வள்ளிநாயகியின் கொங் கையின்மீதுள்ள புதுமணத்தை நுகர்ந்து, சிவமலையாம் அருணசலத் திருத்தலத்தில் மகிழ்கின்ற அழகிய பெருமிதம் உடையவரே! ஜெய ஜெய அருணசலா "சிவயநம", ஜெய ஜெய அருணசலா "மசிவயந", ஜெய ஜெய அருணசலா "நமசி வய", அழகிய மூலப்பொருளே! ஜெய ஜெய அருணசலா! "யநமசிவ", ஜெய ஜெய அருணசலா! "வயநமசி", ஜெய ஜெய அருணசலா "சிவயநமஸ்து" என்று மாறி மாறிச் செபித்து, ஜெய ஜெய என்று கூறி அருணசலத்தில் மனக்கண்ணை வைத்து, ஹரஹர திருவடி மலையே! (சிவமலையே) எனத் தியா னித்து உள்ளம் உருகி, ஜெய ஜெய என்ற இந்த மந்திரம் குரு தந்த பாக்கியம் என உள்ளம் பொருந்தி, இறைவனுடைய ஒளி வீசும் திருவடியை "சிவசிவ" திருவடிமலையே! (சிவமலையே) எனப் புகழ்ந்து, திருவடியின்மீது வீழ்ந்து தொழுது போற்றிய இன்பம் பெருக, அத்திருவடியின் சிவமந்திரத்தால் பெறுகின்ற கடலமுதம் போன்ற இனிய அமுதை அடியேன் பருகி மகி ழேனோ?

## விரிவுரை

இத்திருப்புகழ் மிகவும் அருமையானது; பாராயணஞ் செய் தற்குரியது. இதனை நாடோறும் பாராயணம் புரிவோர் வினை கள் விலகப் பெறுவர். திருவருளை எளிதில் அடைவார்கள்.

இதில் பஞ்சாக்கரமும் நினைக்க முத்தியளிக்கும் "அருணத் திரி" என்ற திருநாமமும் பலமுறை வருகின்றன.

"சிவயநம" என்ற பஞ்சாட்சரம் எழுத்துக்கள் மாறிமாறி வருகின்றது. இப்படி உச்சரிப்பதனுல் அதிக பயன் உண்டு என்று திருமூலர் கூறுகின்றூர். அடியில்வரும் திருமந்திரப் பாடல்களால் அறிக.

நகார மகார சிகார நடுவாய்
வகாரம் இரண்டும் வளியுடன் கூடி
ஒகார முதற்கொண் டொருக்கால் உரைக்க
மகார முதல்வன் மனத்தகத்தானே.

சிகார வகார யகார முடனே
நகார மகார நடுவுற நாடி
ஒகார முடனே ஒருகால் உரைக்க
மகார முதல்வன் மதித்து நின்ருனே.

வளி—சிவனுகிய 'ய';
மகார முதல்வன்—நாதத்துக்குத் தலைவனுன சிவன்;

பஞ்சாட்சரம் நகாரத்தை முதலாக வைத்துக் கூறுவது வேதமுறை; சிகாரத்தை முதலாக வைத்துக் கூறுவது ஆகம முறை.

சிகாரம் முதலாகிக் கடைசிவரையில் மாறும் முறையை இங்குக் கூறியவாறே, திருமூலரும் திருமந்திரத்தில் கூறி யுள்ளார்.

ஆயுஞ்சிவாய நமமசி வாயந
வாயு நமசிவா யயநம சிவாயந
வாயுமே வாய நமசியெனு மந்திர
மாயுஞ் சிகாரம் தொட்டந்தத் தடைவிலே.

செயசெய அருணுத்திரி சிவயநம :—

அருணம்—சிவப்பு, அத்திரி—மலை. அருணுத்திரி—சிவந்த மலை! அருணுசலம் ''சிவயநம'' ''மசிவயந'' ''நமசிவய'' ''யநம சிவ'' ''வயநமசி'' என்று ஐந்து வகையாக மாறி வரு கின்றது.

செயசெய அருணுத்திரிதனில் விழிவைத்து :—

'ஜெய ஜெய' என்று கூறி அருணுசலத்தில் உள்ளக் கண்ணை வைக்கவேண்டும்.

''உணர்வு விழிகொடு நியதி தமதூடு நாடுவதும்''

—சீர்பாத வகுப்பு.

''உள்ளக் கணேக்க அருள்வாயே'' —(ககனமும்) திருப்புகழ்.

அரகர சரணுத்திரி யெனவுருகி :—

சரணம்—திருவடி; அத்திருவடி மலைபோல் உதவுகின்றது அதனுல் சரணுத்திரி என வந்தது.

திருவடிமலையாய் விளங்கும் சிவத்தைக் குறிக்கும்.

''செங்காட்டங் குடிமேய திருவடிதன்
திருவருளே பெறலாமோ திறத்தவர்க்கே''

—சம்பந்தர் 111-63-7.

திருவடியேசிவ மாவது தேரில்
திருவடியேசிவ லோகம் சிந்திக்கில்
திருவடியேசெல் கதியது செப்பில்
திருவடியே தஞ்சம் உள்தெளிவார்க்கே.

—திருமந்திரம் (138)

"................சுத்தஞானமெனும்
தண்டையம் புண்டரிகம்" —கந்தரலங்காரம் (92)

இதனுல் சரணத்திரி திருவடிமலை—சிவமலை யெனப் பொருள்படும்.

செல்வத்துக்கு நாயகனுன திருமாலும்;

கல்விக்கு நாயகனுன பிரமாவும்,

அண்ண முடியாதபடி நின்ற சிவமலை அண்ணுமலை; மிகுவுயர்ந்த ஞானமலை திருவண்ணுமலை.

ஹர ஹர! திருவடிமலையே! என்று கூறி உள்ளம் உருக வேண்டும்.

**செயசெய குருபாக்கிய மெனமருவி :—**

"ஜெய ஜெய" என்ற இந்த மந்திரம் எங்கள் குருநாதர் தந்த பாக்கியம் என்று கருதி உள்ளம் பொருந்த வேண்டும்.

**சுடர்தாளை சிவசிவ சரணுத்திரி செயசெயென :—**

சுடர்தாள்—ஒளிவீசும் திருவடி.

நூறுகோடி இளஞ் சூரியர்களின் ஒளிபோல் விளங்குவது முருகவேளின் திருவடி.

உததியிடை கடவுமர கதவருண குலதுரக
உபலளித கனகரத சதகோடி சூரியர்கள்
உதயமென அதிகவித கலபகக மயிலின்மிசை
உகமுடிவி னிருளகல ஒரு சோதி வீசுவதும்
...........மணநாறு சீறடியே" —சீர்பாத வகுப்பு.

இறைவனுடைய திருவடியின் ஒளி ஆணவ இருளை யகற்றும்.

சிவ சிவ சரணுத்திரியே! ஜெயஜெய என்று கூறித் துதி செய்ய வேண்டும்.

**சரண்மிசை தொழுதேத்திய சுவைபெருக :—**

முருகனைக் காயத்தால் தொழுது வாக்கினுல் துதிக்க வேண்டும்.

இந்தக் கருத்தைச் சேக்கிழார் பெருமான் "வாழ்த்தி வணங்குவாம்" என்ருர்.

முருகனுடைய திருநாமங்கள் தேனினும் இனிக்கும் சுவையுடையன; அந்த நாமங்களைக் கூறுவதனுல் அமுதூறிப் பசியாறும்.

"குகனெ குருபர னேஎன நெஞ்சிற்
புகழ அருள்கொடு நாவினி லின்பக்
குமுளி சிவவமு தூறுக உந்திப் பசியாறி" —திருப்புகழ்.

இத்தகு சிவவாக்கியத் தேனமுதமாகிய கடலைப்பருக வேண்டும் என்கின்ருர்.

**செயசெய சரணத் திரியென முநிவர்க்கணமிது வினைக்காத்திடு மெனமருவச் செடமுடி மலைபோற் றவுணர்களவியச் சுடும்வேலா :—**

முனிவருடைய குழாங்கள் முருகப் பெருமானைத் தஞ்சம் புகுந்து, உன் பாதமே எமக்குப் புகலிடம் என்று வேண்டினுர்கள்.

கிரவுஞ்சமலையும் ஏழுமலைகளும் அசுரர்கட்கு உறைவிடமாகவும் பாதுகாவலாகவும் இருந்தன.

செடம்—உடம்பு. முடி—தலை.

முருகவேள் மலைகளும் அசுரர்களும் வெந்து நீருக வேலாயுதத்தை யேவியருளினுர்.

**திருமுடி யடிபார்த்திடுமென இருவர்க் கடிதலை தெரியாப் படிநிண :—**

"நான் பரம்!" "நான் பரம்" என்று மாலும் அயனும் தமக்குள் வாதிட்டு மோதி நின்றபோது, சிவபெருமான் அவர்கட்கு இடையே அக்கினி தாணுவாக நின்று, இதன் அடிமுடியைக் காண்பவர் பெரியவர் என்று கூறியருளினுர். திருமால் பன்றி வடிவாகி அடியையும், பிரமன் அன்னவடிவாகி முடியையும் பலகாலங் தேடித்தேடி அடிமுடி காணமுடியாது திகைத்து நின்றனர்.

நிண—நின்ற.

**சிகிநாட்டவன் :—**

சிகி— அக்கினி.

சிவபெருமான் அக்கினி விழியுடையவர். அக்கினிக் கண என்பது ஞான விழியாகும்.

**செயசெய சரணுத்திரி யெனுமடியெற் கிருவினை பொடியாக்கிய சுடர் வெளியில் திருநட மிது பார்த்திடுமென மகிழ்பொற் குருநாதா :—**

இந்த அடி அருணகிரிநாதருக்கு முருகன் திருநடன தரிசனந் தந்தருளிய வரலாற்றைக் குறிப்பது.

ஜெய ஜெய முருகா! உன்பாதமே அடைக்கலமான மலை என்று ஏத்திய அருணகிரிநாதருக்கு முருகவேள் தமது திருநடனத்தை, சிவஞான வொளி வீசும் வெளியில் காட்டியருளினுர். அந்த நடனதரிசனம் இருவினைகளைத் துகள் செய்யும் திறமுடையது.

**திகழ் கிளிமொழி :—**

வள்ளியம்மையார் பேசும் பேச்சு கிளிமொழி போன்ற இனிமையுடையது.

இதேபோல் அப்பர் பெருமானும் உமாதேவியாரைக் கூறுகின்ருர்.

**''தேனேக்குங் கிளி மழலை உமை கேள்வன்''**

அன்றியும் பால்சுவை போன்றது என்கின்ருர்.

''தேனென்று பாகென்று உவமிக்கொணு மொழித் தெய்வ வள்ளி'' என்பது கந்தரலங்காரம்.

**சிவகிரி அருணுத்திரி ;—**

திருவண்ணுமலை சிவமே யாகும். ஆதலால் சிவகிரி யென்ருர்.

அருணம்—சிவப்பு; அத்திரி—மலை; அருணுசலம்.

## கருத்துரை

அருணை மேவும் அண்ணலே! உன்னை வழுத்தி நாம அமுதத்தைப் பருக அருள் செய்.

# கற்பு

---

## அறிவரசி

அறிவரசி தன் கணவன் அநந்தனுடன் இல்லற வாழ்வில் இனிது வாழ்ந்தாள். அறிவரசி நற்குணவதியாய் நல்லறம் பலபுரிந்து இல்லறத்தை நடாத்தி வந்தாள். சிங்கநல்லூரில் அவளைப் புகழா தாரில்லை.

அநந்தன் மேலதிகாரியின் கொடுமையால் வேலை யிழந்தான். அங்கும் இங்குமாக அலைந்தான். வேலை கிடைக்கவில்லை. முடிவில் ராணுவத்தில் சேர்ந்தான். முடுக்கான உடம்பும் மிடுக்கான வீரமும் அவன்பால் அமைந்திருந்தன.

தன் கணவன் ராணுவத்தில் சேர்ந்தது குறித்து அறிவரசி பெரிதும் வருந்தினுள். கணவனைப் பார்த்து ''அன்புக் கருவூலமே! தாங்கள் என்னைக் கலந்து யோசிக்காமலும், சிந்தனையுஞ் செய்யா மலும் இராணுவத்தில் சேர்ந்தீரே? இது நியாயமா?

தங்களைக் கண்காணுத நெடுந்தூரத்துக்கு அனுப்பி விடுவார் களே. நான் தனித்து எப்படி இருப்பேன்? தங்களைப் பிரிந்து வாழ நான் சம்மதிப்பேனு? பெண்களுக்குக் கணவன்தான் உயிர்; சுகம் இன்பம் வாழ்வு எல்லாம் கணவன்தானே; இப்படி அவசரப் பட்டுச் செய்துவிட்டீரே'' என்று கண்ணீர் சொரிந்து பரிந்து அழுதாள்.

''அறிவரசி அழாதே, பேருக்கு ஏற்ப அறிவு உனக்கு இருக்க வேண்டாமா? மக்கு மாணிக்கமே? கடவுள் தந்த வலிமை பொருந் திய இந்த உடம்பால் நாட்டின் பாதுகாவலுக்கு நான் உழைக்க வேண்டாமா? இது சிறந்த சேவை. இந்தப் பாரத நாட்டின் பெருமை பறிபோகாமல் இருக்கப் பாதுகாவலாக இருந்து பணி செய்யும் இலாகா ராணுவம். அந்த இராணுவமான பொன் மாளி கையில் ஒரு செங்கல்லாக இருந்து பணிபுரிவது உத்தமமான தொண்டு. நூறிலும் மரணம், ஆறிலும் மரணம், நான் சிந்தித் துத்தான் இதில் சேர்ந்தேன். நீ கவலைப்படாதே. என்னை நாட்டின் சேவைக்கு அர்ப்பணஞ் செய். இதில் உனக்குப் பெருமையுண்டு. சில காலம் பொறுத்து லீவுபெற்று வருவேன். அப்போது நம் வாழ்வு சிறக்கும். வருந்தாதே'' என்ருன் அநந்தன்.

முதல் மாதச் சம்பளத்தை வாங்கிவந்து மனைவியிடந் தந்தான். அவள் கணவனை வணங்கி வாங்கினாள். அந்தவூரில் உள்ள ஆஞ்சனேயர் கோயிலுக்கு அபிஷேகஞ் செய்தாள். "வீர அநுமாரே, என் கணவனுக்கு நீர்தான் துணை. ஏ ராம தூதரே! சஞ்சீவிமலை கொணர்ந்து அன்று லட்சுமணர் முதலியவர்கட்கு உயிர்தந்தது போல் என் கணவனுருக்கு நலஞ் செய்வீராக, அவரைக் காப்பது உமது கடன்" என்று வேண்டிக் கொண்டாள்.

அநந்தனுக்கு ராணுவப் பயிற்சி முடிந்தது; மேல் அதிகாரி எல்லைப் புறத்துக்கு அவனைப் போகுமாறு கட்டளை பிறப்பித்தார். அநந்தன் தன் அன்பு மனைவியிடம் கூறத் தயங்கினான். அவள் பெரிதும் வருந்தி யழுவாளே என்று எண்ணி ஏங்கினான். அன்றிரவு அவளிடம் "பெண்மணியே! கூடுவதும் பிரிவதும் உலக இயல்பு. மேலதிகாரி என்னை வட எல்லைப் பகுதிக்குச் சென்று சேவை செய்யுமாறு கட்டளையிட்டுள்ளார். நான் நாளை போகவேண்டும். நீ வருந்தாதே. மகிழ்ச்சியுடன் தடைகூறாது விடைகொடு. ஓராண்டு சேவை செய்துவிட்டுத் திரும்பிவந்து உன்னைச் சந்திப்பேன்" என்றான். இதைக்கேட்ட அவள் இடியேறுண்ட பெண்ணுகம்போல் நடுங்கினாள். அழுதாள். கணவன் கால்மீது தொழுதாள். தன் நாயகனை அடி முதல் முடிவரை பார்த்தாள். அவளுடைய பார்வை அவனை எடுத்து விழுங்குவதுபோல் இருந்தது. பேச்சுவராமல் தொண்டை யடைத்துக் கொண்டது. விம்மினாள், விக்கினாள். வெய்துயிர்த்தாள், ஒருவாறு சிறிது தேறி, "போய் வாருங்கள். அடிக்கடி உங்கள் க்ஷேமத்தை எழுதுங்கள்" என்றாள்.

மறுநாள் தன் கணவனுக்கு நல்ல இனிய பட்சணங்களை வழிக்கு உதவியாகச் செய்தாள். பாசிப் பருப்பு உருண்டைகள்; தேன்குழல்; நெய்யதிரசம்; ரசப்பொடி; கறிவேப்பிலை பொடி; ஆவக்கா மாங்காய் ஊறுகாய் இவைகளையெல்லாம் ஒரு தகரடின் நிறைய அடுக்கினாள். ஆஞ்சனேயருடைய பிரசாதத்தைக் கணவனிடம் தந்து, நெற்றியில் சிந்தூர திலகம் இட்டு, போய்வாருங்கள் சுகமே திரும்பி வாருங்கள். ஆஞ்சனேயருடைய அருளாய வஜ்ரகவசம் உங்களுக்கு அரண் செய்யும்" என்றாள். தன் துயரத்தை ஆமை தன் உடம்பை ஓட்டுக்குள் அடக்கிக்கொள்ளுவதுபோல் அடக்கிக் கொண்டாள். நெடுந்தூரம் போகின்ற கணவனை அழுது கொண்டே வழியனுப்புவது பிழை" என்று அறிந்து, சிரித்த முகத்துடன் வழியனுப்பினாள்.

அநந்தன் உள்ளம் உணர்வு முதலிய அனைத்தையும் அறிவரசியிடம் விட்டுவிட்டு வெறும் உடம்புடன் புகைவண்டியேறிச் சென்றான்.

உயிர் பிரிந்த உடம்பைப் போல் அறிவரசி ஆறாத்துயரமடைந்தாள். அவளுக்கு உலகமே இருண்டுவிட்டதுபோல் இருந்தது: ஒரு வேலையுஞ் செய்யத் தோன்றவில்லை. சமையல் செய்யவும் மனம் எழவில்லை. பட்டினியால் வாடினாள். பசிதாளாமல் ஏதோ பொங்கித் தின்றாள்; கனவிலே கணவனைக் கண்டு களித்தாள். வெறுப்பாகச் சில காலம் வேதனையுடன் கழிந்தது,

அந்நகரின் ஈசான திசையில் ஒருமடம், அந்த மடத்தில் சதானந்த யதீந்திரர் இருந்து மக்களுக்கு வேதாந்த பாடம் நடாத்திக் கொண்டிருந்தார். தினந்தோறும் மாலை 7 முதல் 9 மணிவரை பாடம் நடாத்துவார். ஞாயிற்றுக் கிழமைகள்தோறும் மாலை 5 மணிக்கு நாமாவளி பஜனை நடைபெறும். அன்பும் அடக்கமும் உள்ள மக்கள் அங்கு கூடித் தங்கள் நேரத்தை நல்ல வழியில் கழிப்பார்கள். அந்நகரை யரசுபுரியும் அரசனும் சில சமயத்தில் அங்கு வந்து கலந்து இன்புறுவான். எல்லாம் முடிந்தபின் பிரசாதம் தருவார்கள். பக்தர்கள் காணிக்கையை உண்டியில் போடுவார்கள்.

மடத்தைச் சுற்றி மாமரங்களும், தென்னைகளும், பலா மரங்களும் நின்றன. பலாப்பழங்கள் தொங்கின. தென்னங் குலைகள் நிறைந்து நின்றன. வாழையில் தார்கள் நீண்டு இருந்தன. நறுமணப் பூச்செடிகள் சூழ்ந்திருந்தன. சாந்தியான இடம். அங்கு வந்தவுடனே மக்கள் மனதில் ஒரு அமைதி யேற்படும். சதானந்த யதீந்திரருக்கு ஒரு பிரதம சீடர் இருந்தார். அவர் பேர் ராமானந்தர். சில நேரங்களில் இவர் பாடஞ் சொல்லுவார். இப்படி மடத்திற்குப் பக்தியுடன் வரும் அடியார்கள் அதற்கு வேண்டிய உதவிகள் புரிந்து வந்தார்கள்.

அறிவரசி தன் மன வேதனையை மாற்றக்கருதி அம்மடத்துக்குச் சென்று சதானந்தயதீந்தரரை வணங்கி வேதாந்த பாடங் கேட்கத் தொடங்கினாள். அதனால் அவளுக்கு மனக்கவலை மாறத் தொடங்கியது.

ஒரு நாள் யதீந்திரர் "உலகமேமித்தை, இது மாயப் பிரபஞ்சம். வாழ்வு ஜாலவித்தை. பிரம்மம் ஒன்றே நித்தியம். பிரம்மத்தைத் தியானிப்பதுவே பிரம்மானந்தம். எல்லாரும் உலகை மறந்து, ஆசைகளைத் துறந்து பிரம்மத்தை நினைந்து, துரியாதீதத்தில் பறந்து சென்று சுகானுபவத்தைப் பெறவேண்டும்" என்று உபதேசித்தார். அப்போது அறிவரசியின் கண்களில் முத்துமுத்தாக நீர் சிந்தின. இதை யதீந்திரர் கவனித்தார். அடக்கமும், அழகும், பண்பும் ஒருங்கேயமைந்த அவளிடம் யதீந்திரருடைய மனம் பற்றியது. பாடம் முடிந்தவுடன் எல்லோரும் பிரசாதம் பெற்றுத் திரும்பி

ஞர்கள். யதிந்திரர் அறிவரசியைப் பார்த்து, தனியே ஆசிகூறி "நீ வருந்தவேண்டிய காரணம் யாது? என்று வினவினர்.

அறிவரசி யதிந்திரரைப் பணிந்து, "சுவாமி! என் கணவனுர் ராணுவத்தில் சேர்ந்து வடக்கேயுள்ள எல்லைப் பகுதிக்குச் சென்றிருக்கின்ருர். அவர் சுகமே திரும்பி வரவேண்டும் என்ற கவலையால் என் மனம் மிகவும் நிலைகுலைந்துள்ளது. தாங்கள் ஆசி கூறுங்கள். அவருடைய க்ஷேமத்துக்காக இறைவனிடம் விண்ணப்பஞ் செய்யுங்கள்" என்று கூறி தன் முந்தானையால் கண்ணைத் துடைத்துக் கொண்டாள். அவளுடைய ஏற்றம் தோற்றம் முதலியவைகளால் கட்டுண்ட யதிந்திரர், அவள் விலாசத்தையுங் கணவனுடைய விலாசத்தையும் எழுதி வாங்கிக் கொண்டார். அவருடைய முதற் சீடரான ராமானந்தரும் அவளை இமை கொட்டாது கண்டு களித்தார். அறிவரசி என்ற அனலால் அந்த இரு நெய்க் குடங்களும் உருகின. அறிவரசி மெல்ல விடைபெற்று வீட்டுக்குச் சென்ருள்.

சதானந்த யதிந்திரர் அன்றிரவெல்லாம் வெதும்பி வேதனையுற்ருர். மறுநாள் மாலை எப்போது வரும் என்று எதிர்பார்த்தார். மாலை உபந்யாசம் தொடங்கினர். அறிவரசி வந்து வணங்கி ஒருபுறம் ஒதுங்கி யமர்ந்து, யதிந்திரருடைய பொன்மொழிகளைச் செவிமடுத்துச் சிந்தை மகிழ்ந்தாள். யதிந்திரரைத் தெய்வத் தூதராக நினைத்தாள். அவருடைய ஆசீர்வாதத்தால் தன் கணவன் விரைவில் சுகமே வரக்கூடும் என்று நம்பினுள். யதிந்திரருடைய கடைக் கண் பார்வை அவள்மீது அடிக்கடி சென்றது, அவருடைய உள்ளத்தில் ஒரு சூடு தோன்றியது. அது கொழுந்துவிட்டு எரிந்தது. அவளுடைய பணிவு முதலிய பண்புகளைக் கண்டு அவள் தனக்கே யுரியவள் என்று அவருடைய பேதை மனங் கருதியது,

மறுநாள் காலையில் மடத்தில் இருந்து ஒரு சீடன் ஒரு கடிதத்தைக் கொணர்ந்து அவளிடம் கொடுத்தான். அதை அவள் உறையைக் கிழித்து, விரித்துப் படித்தாள்: மனம் பதை பதைத்தாள்.

> "என் அன்பு மாணிக்கமே! உள்ளத்தைக் கொள்ளை கொண்ட தெள்ளமுதமே! ஆசி பல, இந்தப் பிரம்மம் உன்னை விரும்புகின்றது. நீ இந்தப் பிரம்மத்துடன் ஐக்கியமாகிப் பிரம்மானந்தத்தை அடைவாயாக. இது பரம ரகசியமாக இருக்க வேண்டும். மடம் இதற்கு ஏற்ற இடம் அன்று. அங்கேயே இரவு வந்துவிடுவேன். உன் பதிலை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

இப்படிக்கு
**சதானந்த யதீந்திரர்**

இதைப் பார்த்த அவள் மனம் வெடித்து விடும்போல் இருந்தது. அந்த மடத்து ஏவலனைப் பார்த்து நீ மாலை 3 மணிக்கு வா'' என்றாள். சிறிது நேரம் பொறுத்து மடத்திலிருந்து மற்றொரு ஏவலன் வந்து ஒரு கடிதத்தை நீட்டினான். அதனையும் வாங்கி உறையைக் கிழித்துப் படித்தாள்.

"கட்டிளங் காரிகையே! மட்டிலா அழகுடைய மாதர் மணியே! உனக்கு எதிர்காலம் சிறப்பாக இருக்கும். இந்த மடத்துக்கு நான்தான் எதிர்கால அரசு. இந்தக் கட்டை அந்தக் கட்டையுடன் சேரக் கருதுகின்றது. இரு கட்டைகளும் ஒன்று பட்டு நித்தியானந்த நிரதி, சயப் பெருவாழ்வைப் பெறவேண்டும். நீ குறிப்பிடும் நேரத்தில் வருவேன். உன்னையே நினைந்து நினைந்து உருகும்.

மடாலய நிர்வாகி
**ராமானந்தர்**

இதனையும் படித்த அறிவரசி புன்னகை பூத்தாள். மாதர்கள் கற்புக்கும், பக்தி நெறிப் பயிருக்கும் வேலியாகவுள்ள மடத்துத் துறவிகள் இப்படியென்றால் நாட்டில் நல்லறம் எங்கிருந்து நலியாது பொலிவு கொள்ளும்? ஈசனே! வீரமாருதி! நீதான் இவர்கட்கு நல்லறிவு புகட்ட வேண்டும். நான் மடத்துக்குப் போனதே பிழையென்று உணர்கின்றேன். குருவுஞ் சீடனும் ஒரே தரமாகத்தான் இருக்கின்றார்கள். இந்த வகையில் ஒற்றுமையுடன் திகழ்கின்றார்கள். இவர்கட்கு ஏன் இப்படி புத்தி சாக்கடைக் குழியில் விழுந்தது'' என்று எண்ணினாள். இரு கடிதங்களை எழுதினாள். அந்த ஏவலர்களிடம் தனித்தனியே ஒருவர் அறியாமல் ஒருவரிடம் கொடுத்தனுப்பினாள்.

யதீந்திரர் தனியே யிருந்து ஆவலுடன் பர பரப்பாகக் கடிதத்தைப் பிரித்துப் படித்தார்.

உ
ஓம் தத்சத்

"என் அருமைக் குருமணியே! அஞ்ஞான இருளை யகற்றும் மெய்ஞ்ஞான பானுவே! தங்கள் கடிதத்தைக் கண்ணுற்றுக் கவலை யகன்று கழிபேருவகை யடைந்தேன். இவ்வளவு சீக்கிரத்தில் எனக்கு பிரம்மானந்தம் எய்தும் என்று நான் கனவிலுங் கருதினேனில்லை. நான் பரம பாக்கியசாலி. இனி எனக்கு ஒரு குறையுமில்லை. அந்தப் பிரம்மமே என்னை நாடித் தேடி ஓடி வருகின்றது என்றால் அது என் முற்பிறப்பின் தவம் போலும்.

இன்று இரவு 11 மணிக்கு ஊரடங்கிவிடும். பிரம்மம் என் வீட்டுக்கு எழுந்தருளட்டும். தங்கட்குச் சிற்றுண்டி தயாரித்துப் படைப்பேன். பிரம்மம் உண்டு பிறகு எனக்குப் பிரம்மானந் தத்தை வழங்குவதாக. ஆனுல், ஒரு விஷயம், தாங்கள் வருவதை யாராவது பார்த்துவிட்டால் பேராபத்தாய் முடியும். ஆதலால் தாங்கள் ஒரு புடவை கட்டிக்கொண்டு பெண்வடிவில் வரட்டும். எல்லாம் இன்ப மயமாக விளங்கும்,

இப்படிக்கு
பிரம்மத்தை நாடும்
**அறிவரசி**

யதீந்திரருக்கு அளவற்ற மகிழ்ச்சி. அவருக்கு உடம்பு புல்லரித் தது. தன் வலேயில் அறிவரசி முற்றிலும் சிக்கிக் கொண்டாள். இனி அவள் நமக்கே சொந்தம். இனி நமக்கு இன்ப வாழ்வு'' என்று எண்ணி எண்ணி மகிழ்ந்தார். புடவை ரவிக்கை யெல்லாம் தயாரித்து வைத்துக் கொண்டார்.

மற்ருெரு அறையில் ராமானந்தர் கடிதத்தைப் பிரித்துப் படித் தார்.

உ
சிவமே தவம்

''என் அன்புக் குருவே! அருள் உருவே! பல கோடி வணக் கம். தாங்கள் என்மீது கொண்ட கருணேக்கு நான் என்ன கைம் மாறு செய்யவல்லேன்? பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து தத்த ளிக்கும் எனக்கு தாங்கள் ஒரு மரக்கட்டையாக வருகின்றீர்கள். ஆதலால் அந்தக் கட்டையை இந்தக் கட்டை விரும்பாமலிருக் குமா? ஆ! என் பாக்கியமே பாக்கியம். வருக. வருக. தங்கட்கு நல்வரவு! என் ஆசைக் கனலுக்குக் கட்டை அவசியமானது. இரவு 11½ மணிக்கு வருக. ஆனுல் இந்த விஷயம் வெளியே தெரிந்தால் பெருஞ் சங்கடம் விளேயும். நான் ராணுவ வீரன் மனேவி. ஆதலால் தாங்கள் ஒரு பெண் வடிவம் பூண்டு வருக. குறித்த நேரந் தவருமல் வருக.

இங்ஙனம்
கட்டையை விரும்புந் தனிக்கட்டை
**அறிவரசி**

ராமானந்தர் மனம் எல்லே மீறிய இன்பத்தால் துள்ளியது. மனத்தில் இன்பக் கனவுகள் கண்டார். அவரும் புடவை ரவிக்கை முதலியன தயாரித்து வைத்துக் கொண்டார்.

அன்று மாலை பாடம் நடைபெறவில்லை. வந்தவர்கட்குப் பிரசாதம் கொடுத்து அனுப்பிவிட்டார்கள்.

சதானந்த யதீந்திரர் "ராமானந்தா! என்ன ஒரு மாதிரியாக இருக்கின்றாயே? இந்த மடத்தின் மக்கள் உய்வு பெறவேண்டும். மாயை இருளை அகற்ற வேண்டும். ஆசாபாசத்தை ஓட்டி, பாவங்களை வாட்டி, ஞானவிளக்கை நீட்டி நாட்டுக்கு நலஞ் செய்ய வேண்டும்" என்றார். "நல்லது குருநாதா" என்றார் அவர்.

இரவு 10 மணிக்கு அறிவரசிக்கு தன் படுக்கை வீட்டில் கட்டிலில் மெத்தையை விரித்து, ஊதுவத்தி யேற்றி வைத்தாள். சரியாக 11 மணிக்கு பெண் வடிவில் யதீந்திரரே அங்கும் இங்கும் பார்த்துக் கொண்டு மெல்ல திருட்டுப் பூனைபோல் அவள் வீட்டில் நுழைந்தார்.

அறிவரசி அன்புடன் வரவேற்றாள். அவருடைய அடிமலர்மீது வீழ்ந்து வணங்கினாள். கூடத்தில் ஒரு பீடத்தில் இருக்கச் செய்தாள்.

சதானந்த யதீந்திரர் "ஏ மாதரசே! எல்லாம் பிரம்மம். ஆணும் பிரம்மம்; பெண்ணும் பிரம்மம். பிரம்மம் பிரம்மத்துடன் ஐக்கியமாக வேணும். அதுவே பிரம்மானந்தம்."

"நல்லது குருவே! இந்தாருங்கள் இந்தச் சிற்றுண்டியை பிரம்மம் அருந்தட்டும்" என்று கூறி ஒரு தட்டில் சிற்றுண்டியை வைத்தாள். யதீந்திரர் உண்டார். "சுவாமி! வாருங்கள். இந்த சயன அறைக்கு" என்று அழைத்துப் போய் கட்டிலில் இருத்தினாள். "சுவாமீ! சற்று பொறுங்கள். பால் கொண்டு வருகின்றேன்" என்று கூறிச் சென்றாள். 11–30 மணிக்கு ராமானந்தர் பெண் வடிவில் வந்தார். அவரை மெல்ல அழைத்து, இரகசியமாக அந்த அறையில் ஒரு பெண் கட்டை யிருக்கின்றது: இன்று அந்தக் கட்டையுடன் இந்தக் கட்டை சேரட்டும்" என்று கூறி அந்த அறைக்குள் அனுப்பி பளிச்சென்று கதவைச் சாத்தி வெளியே தாளிட்டுப் பூட்டிவிட்டாள்.

உள்ளே இரு பெண் பிரம்மங்களும் ஒன்றை யொன்று பார்த்து மகிழ்ந்தன. ஒரு பிரம்மம் மற்றொரு பிரம்மத்தைத் தழுவியது. பிறகுதான் தெரிந்தது உண்மை.

"ராமானந்தா! நீ எங்கே வந்தாய்?"

"குருநாதா! தாங்கள் சென்ற வழியைப் பின்பற்றி வந்தேன்." கதவைப் பலமாகத் தட்டினார்கள். கதவு திறக்கப்படவில்லை.

அறிவரசி அடுத்த வீட்டு அம்மாளைத் துணைக்கு அழைத்துப்போய் அந்த நகரத்து அரசரிடம் நடந்ததைக் கூறி அழைத்து வந்தாள். அரசர் கதவைத் திறந்து பார்த்தார். பெண் வடிவங்களைக் கண்டு

## சாந்தி பருவம்

### மோக்ஷ தருமம்

*(143-ஆம் பக்கத் தொடர்ச்சி)*

**வாயுக்களின் வரலாறு**

வியாச முனிவருடைய சீடர்களான சுமந்து, வைசம்பாயனர், ஜைமினி, பைலர் என்ற நால்வர்களும் வியாசரிடம் வேதங்களை அத்யயனஞ் செய்தார்கள். இந்த நால்வர்களுடன் சுகரும் சேர்ந்து ஐவர்கள் பஞ்சாக்கினிகளைப் போல் விளங்கினார்கள்.

வியாசர், ''மாணவர்களே! நீங்கள் யாண்டும் வேததர்மங்களைப் பரவச் செய்யுங்கள். உத்தமமான சீடர்களுக்கு உபதேசியுங்கள்'' என்று கட்டளையிட்டார். அந்த நால்வர்களும் குருநாதரை வலம் வந்து வணங்கி, விடை பெற்றுச் சென்றார்கள். பூமிக்கு வந்து அந்தணர், அரசர், வைசியர் என்பார்கட்கு வேதம் ஓதுவித்து யாகாதி கிரியைகளைச் செய்வித்தார்கள்.

மாணவர்களைப் பிரிந்ததனால் வியாசர் மனவருத்தத்துடன் வேதம் ஓதாமல் மௌனமாக இருந்தார். அங்கு சகல கலைகளிலும் வல்லவரும் பரமஞானியுமான நாரதமுனிவர் வந்தார். வியாச முனிவரைப் பார்த்து, ''மாதவரே! தாங்கள் வேதம் ஓதாமையால் இந்த இமாசலம் விளங்கப் பெறவில்லை. ஓதாமை வேதத்துக்குத் தோஷம்; விரதம் இல்லாமை அந்தணனுக்குத் தோஷம்; இந்தப் பூமிக்கு பாகுலிக தேசத்து மக்கள் தோஷம்; பெண்களுக்கு வேகந் தோஷம்'' என்று கூறினார்.

---

*சீறினார். மடத்துச் சாமிகள் இத்தகாத காரியங்களைச் செய்தால் நாடு எப்படி கடைத்தேறும்'' என்று இருவரையும் நையப்புடைத்து விரட்டினார்.*

*அரசர் அதுமுதல் மடத்தைக் காலிபண்ணி பள்ளிக்கூடமாக்கினார்.*

*அறிவரசி அரசனைப் பணிந்து என் கணவர் என்பால் விரைந்து வர உதவி செய்யும் என்று வேண்டினாள். அரசருடைய முயற்சியால் அநந்தன் வீடு வந்து சேர்ந்தான். அரசனிடமே சேனைத் தலைவனாக அலுவல் பார்த்தான். அறிவரசி அல்லல் இன்றி அநந்தனுடன் வாழ்ந்தாள்.*

வியாசர் தமது மகனுன சுகருடன் வேதங்களை ஓதினர். அப்போது பெருங்காற்றடித்தது, ''மகனே! பெருங்காற்று வீசும்போது வேதம் ஓதக்கூடாது'' என்று தடுத்தார் வியாசர்.

சுகர் பிதாவைப் பார்த்து, ''தந்தையே! இந்த வாயுவைப் பற்றியறிய விரும்புகின்றேன்'' என்ருர்.

வியாசர், ''மகனே! விண்ணில் வீசுகின்ற வாயுக்களின் வழிகள் ஏழு.வாயுக்களிடம் சாத்தியர்கள் என்ற தேவகணங்கள் உண்டாயின. வாயுக்களிடம் சமானன் என்ற புதல்வன் தோன்றினன். அவனுக்கு உதானன் என்ற மைந்தன் பிறந்தான். அவனுக்கு வியானன் என்ற மகன் உண்டாயினன். அவனுக்கு அபானன் என்ற புத்திரன் பிறந்தான். அவனிடம் பிராணன் என்ற மகன் பிறந்தான்.

முதல் வழியில் ஆவகன் என்ற வாயு மேகங்களைச் சலிக்கச் செய்து பிராணிகட்கு வாழ்வு தருவதால் பிராணன் என்று பேர் பெற்றது.

உதானன் என்ற வாயு பிரவகன் என்ற பேருடன் சந்திரன் முதலிய சோதிகட்கு உதயஞ் செய்து, மழையைப் பொழியச் செய்கின்றது.

உத்வகன் என்ற மூன்ருவது வாயு கடலிலிருந்து நீரை எடுத்து மேகங்களுக்குக் கொடுத்து மழைக்குக் காரணமாக இருக்கின்றது.

சம்வகன் என்ற வாயு விமானங்களைத்தாங்கியும் மலைகளை உடைப்பதுமாக விளங்குகிறது.

விவகன் என்ற வாயு ஐந்தாவது, பெரிய வேகமுள்ளது; விண்ணில் பயங்கரத்தைச் செய்து நீரை வற்றச் செய்து ஆபத்துக்களைச் செய்கின்றது.

பரிவகன் என்ற ஆருவது வாயு, தேவலோகத்தில் உள்ள ஜலங்களை விண்ணில் ஓடும்படிச் செய்கின்றது. ஆகாய கங்கையைத் தாங்கிக் கொண்டிருக்கின்றது. ஆயிரங்கிரணங்களுள்ள சூரியனைத் தூரத்தில் அடித்து ஒரே கிரணமுள்ளவனைப் போல் செய்கின்றது. அமிர்தகிரணமுள்ள சந்திரனைப் பூரணஞ் செய்கின்தது.

பராவகன் என்ற ஏழாவது வாயு, கல்பத்தின் முடிவில் எல்லாப் பிராணிகளையும் வெளிப்படுத்துகின்றது. யோகிகளுக்கு முத்தியைத் தருகின்றது என்று வியாசர் வாயுக்களைப் பற்றி விளக்கினர்.

## சுகருக்கு நாரதர் உபதேசித்தது

நாரத முனிவர் சுகரிடம் வந்தார். சுகர் அவரை விதிப்படி வரவேற்று, உபசரித்தார். ''தேவரிஷியே! எனக்கு நன்மை எது? என்பதைச் சொல்லும்'' என்று கேட்டார்.

நாரதர் கூறுகின்ருர். "ஒரு மனிதனுக்கு வித்தைதான் கண்கள்; சத்தியந்தான் தவம்; ஆசை தான் துன்பம்; தியாகந்தான் சுகம், பற்றை விடாதவன் துன்பத்தையடைகின்ருன். எதனையுந் தனது என்று எவன் கருதாதவனே அவனே அறிஞன். விருப்பு வெறுப்பு இல்லாதவனே சுகத்தையடைகின்ருன். நிலையில்லாததை நிலை யென்று நினைப்பவன் துயரமுறுகின்ருன்; தன்னிடமிருந்து உண்டாகிய நூலினுல் கட்டுண்டு இறக்கும் *பட்டுப் பூச்சியைப் போல், மனிதன் பந்தபாசத்தால் அழிகின்ருன். தவந்தவிர மனிதனை ஒன்றுமே தொடர்ந்து வராது. இறந்தவனுக்காக இறக்கப் போகின்ற மனிதர்கள் அழுகின்ருர்கள். நடந்ததைப்பற்றி வருந்துவது கூடாது. சூரியன் உதித்தும் அஸ்தமித்தும் மனிதனுடைய வாழ்நாளை நாசஞ் செய்கின்ருன். அது நாளன்று; உயிரை அறுக்கும் வாள். ஆதலால் நீ இன்ப துன்பத்தை விடு;" என்று நாரதர் சுகருக்கு உபதேசித்தார்.

சுகர் சிறிது நேரம் சிந்தித்தார். தெளிவு பெற்ருர். அங்குள்ள செடி கொடிகளையும் பிற பொருள்களையும் பார்த்து, "நீங்கள் என் பிதா அழைத்தால் மறுமொழி கொடுங்கள்," என்று கூறிவிட்டு, யோக நெறிநின்று புறப்பட்டார். அவருடைய ஒளி எல்லா இடங்களிலும் பரவியது. அப்போது குளிர்ந்த காற்று வீசியது.

**சுகர் முத்தி**

சுகர் முத்தியடையக் கருதி விண்ணிலே சென்று கயிலை மலையின் உச்சியை யடைந்தார். அமரர்கள் அனைவரும் அவரை அஞ்சலி செய்தார்கள். சுகர் பிரம்மத்துடன் இரண்டறக் கலந்தார்.

மகனுடைய பிரிவால் வியாசர் "சுகா! சுகா!" என்று அழைத்தார். அங்குள்ள செடி, கொடி, கல், மண் எல்லாம் "ஏன்" "ஏன்" என்று கூறின.

அப்போது சிவபெருமான் வியாசருக்கும் காட்சியளித்து, "அப்பா வியாசனே! உன் மகன் அக்கினி கடையும் அரணி அனலில் என் அருளால் தோன்றினுன். அவன் என்னில் கலந்து விட்டான். அவனைக் குறித்து நீ வருந்தற்க" என்று கூறி மறைந்தருளினுர்.

வியாசர் புத்திர சோகத்தை நீக்கித் தவஞ் செய்தார். "இந்த சுகருடைய சரித்திரத்தைப்படித்தவர் பரகதியடையார்கள்" என்று பீஷ்மர் கூறினுர்.

---

* இதற்குக் "கோசகாரம்" என்று பேர்.

அங்கமே நின் வடிவமான சுகர் கூப்பிட நீ
எங்கும் ஏன் ஏன் என்ற தென்னே பராபரமே."—தாயுமானுர்.

(தொடரும்)

## எமது வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. 6-00 |
| 2. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | அச்சில் |
| 3. | திருப்புகழ்த் திரட்டு | ரூ. 1-00 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற்படைவீடு திருப்பரங்குன்றப் பாடல்களும்) | ரூ. 2-50 |
| 5. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | ரூ. 5-00 |
| 6. | திருப்புகழ் விரிவுரை—மூன்ருவது தொகுதி (மூன்ருவது படைவீடு—பழநி) | ரூ. 5-00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலை) | ரூ. 2-50 |
| 8. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி குன்றுதோருடல் முதற்பாகம் | ரூ. 5-00 |
| 9. | திருப்புகழ் விரிவுரை—ஆரும் தொகுதி (குன்றுதோருடல் இரண்டாவது பகுதியும், பழமுதிர் சோலையும்) | ரூ. 5-00 |
| 10. | மகாபாரதம், வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரார் பாடல்களுடன் கூடியது | ரூ. 5-00 |
| 11. | கந்தரநுபூதி (உரையுடன்) | ரூ. 2-00 |
| 12. | அறிவுரையமுது (கட்டுரைகள்) | ரூ. 0-50 |
| 13. | திருவாசகத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 14. | செந்தமிழ் இன்பம் ( ,, ) | ரூ. 0-50 |
| 15. | சிந்தனைத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 16. | மணிமொழிகள் | ரூ. 0-50 |
| 17. | அநசூயை (வரலாறுகள்) | ரூ. 1-00 |

---